# மலையருவி
# கவிதைகள்

வல்லிக்கண்ணன்

# மலையருவி கவிதைகள்

வல்லிக்கண்ணன்

விற்பனை உரிமை



□ மலையருவி கவிதைகள் □ திறனாய்வு □ வல்லிக் கண்ணன் □ முதல் பதிப்பு 1985 ஜூலை □ வெளியீடு: வளவன் வெளியீட்டகம், 71, சோலைநகர், புதுச்சேரி-3 □ விலை ரூ. 1-50.

● தமிழ்ப் புதுக்கவிதை
வரலாற்றின் மிகச் சுருக்கமும்
மலையருவியின்
'காலடியில் தலை' நூல் திறனாய்வும்

● 12-7-85 புதுச்சேரியில் நடைபெற்ற காலடியில் தலை நூல் அறிமுக விழாவில் ஆற்ற இருந்த ஆய்வுரையின் அச்சு வடிவம்.

ஸ்ரீ கோமதி அச்சகம், 7, சின்னப்ப ராவுத்தர் தெரு, சென்னை-5.
□ விற்பனை உரிமை : தமிழ்ப் புத்தகாலயம், சென்னை-5

# மலையருவி கவிதைகள்

நீண்ட கால வரலாற்றைக் கொண்டுள்ள தமிழ் கவிதையில், தற்காலத்தில், முக்கியமான இரண்டு போக்குகள் நிலவுகின்றன.

ஒன்றுக்கு ஒன்று முரண்பட்ட இக்கவிதைப் போக்குகள் மரபுக் கவிதை என்றும் புதுக்கவிதை என்றும் அறியப்படுகின்றன.

இலக்கண வரம்புகளுக்கு உட்பட்டது மரபுக் கவிதை. இந்தப் போக்கை ஆதரிப்பவர்கள் தடம் விழுந்த பாதையிலேயே தளர்நடைபோட்டு வந்ததால், வாழ்க்கையின் சிக்கல்களுக்கும் காலவேகம் கொண்டு சேர்க்கிற புதுமைகளுக்கும் கட்டுப்பாடுகளுக்கு உட்பட்ட கவிதை இடம் அமைத்துக் கொடுக்காததனால், மரபை மீறும் போக்கு தலை தூக்கியது. காலத்தின் தேவையாகத் தோன்றிய இயல்பான பரிணாமமே அது.

ஆரம்ப கட்டத்தில் வசனகவிதை என்றும், யாப்பில்லாக் கவிதை என்றும், கட்டிலடங்காக் கவிதை, இலகுகவிதை, சுயேச்சா கவிதை என்றும் பலரால் பலப்பல விதமாகச் சுட்டப்பட்டு வந்த இரண்டாவது பிரிவு, பின்னர் புதுக்கவிதை என்று குறிப்பிடப்படலாயிற்று.

'புதுக்கவிதை' என்ற பெயர் காரணமாகவே பலர் அதை எதிர்ப்பதும் இயல்பாயிற்று.

தமிழ் இலக்கியத்தில், கவிதைத் துறையிலும் தான், ஒவ்வொரு காலகட்டத்திலும், அவசியத்தினாலும் தேவை கருதியும் மரபு மீறல்கள்— புதுமைகள்- புகுந்து வந்துள்ளன. அந்த அந்தக் காலத்தில் அந்தப் போக்கு புதுக்கவிதையாகவே விளங்கியிருக்கிறது.

சங்ககாலக் கவிதைகளின் தன்மையில் சிலப்பதிகாரம் அமைந்ததில்லை. கம்பர் காலத்தில் விருத்தப்பா செல்வாக்கு பெற்றது. புகழேந்திப் புலவர் காலத்தில் வெண்பா ஏற்றம் பெற்றது. பின்னர் சாதாரண மக்களுக்கும் புரியக்கூடிய விதத்தில் கவிதை வெவ்வேறு புதுவடிவங்களை ஏற்றிருக்கிறது.

அப்புறம், சமீபகாலத்தில், மகாகவி பாரதியார் துணிந்து பல புதுமைகளைக் கையாண்டு வெற்றி பெற்றார். 'சொல் புதிது, பொருள் புதிது, சுவை புதிது, கொண்ட 'நவகவிதை' என்றே பாரதியார் தமது கவிதைகளைக் குறிப்பிட்டுள்ளார்.

பாரதியார் துணிந்து நடைமுறைப்படுத்திய வடிவங்களில், சோதனை ரீதியாக அவர் கையாண்ட புது முயற்சி 'காட்சிகள்' என்ற தலைப்பில் அமைந்த வசனகவிதை ஆகும்.

அதைத் துவக்கமாகக் கொண்டுதான், பிற்காலத்தில் ந. பிச்சமூர்த்தியும், கு. ப. ராஜ கோபாலனும் தங்கள் கவிதைப் படைப்புகளை உருவாக்கினார்கள்.

தற்காலத்தில் நிலவுகிற கவிதைப் போக்கில் இரண்டாவதான புதுக்கவிதையிலும் இரண்டு பிரிவுகள் தூக்கலாகத் தெரிகின்றன. ஒன்று, தனி மனிதனின் அகநோக்கை முக்கியப்படுத்துவது. மற்றது, விரிந்து பரந்த சமுதாய நோக்கு கொண்டது.

கவிதையில் மட்டும் இல்லை; இலக்கியத்தின் சகல பிரிவுகளிலும் இவை காணப்படுகின்றன.

தமிழ் இலக்கியத்தில் மட்டுமில்லை, உலகத்தின் அனைத்து மொழிகளிலும் தனிமனித நோக்கும், சமுதாயப் பார்வையும் ஆட்சி செலுத்தி, இரண்டு பெரிய அணிகளாகவே செயல் பட்டுக் கொண்டிருக்கின்றன.

தனிமனித நோக்குடன் உருவாக்கப்படுகிற இலக்கியப் படைப்புகள் தனிநபர்களின் மன உளைச்சல்கள், ஏக்கங்கள், ஆசைகள், கனவுகள். நம்பிக்கைகள், நம்பிக்கை வரட்சி, உணர்ச்சிகள், உள்ளத்தின் தேடல்கள். மற்றும் தத்துவ விஷயங் கள் முதலியவற்றையே பிரதி பலிக்கும் இந்தப் போக்கு சமூகப் பிரச்சனைகளை, நாட்டின்

நிலைமைகளை, அரசியல் விவகாரங்களை, அரசியல் தத்துவ அடிப்படையிலான எழுச்சிகள், போராட்டங்கள் எதிர்ப்பு உணர்வுகளை எல்லாம் கவனத்தில் கொள்வது கிடையாது.

அவற்றை வலியுறுத்துகிற இரண்டாவது பிரிவான சமுதாய நோக்கு இலக்கியம், தனி நபர் நோக்கை தனது எதிரியாகவே கருதுகிறது. அந்தப் போக்கை ஆதரிப்பவர்களைப் பிற்போக்கு வாதிகள் என்று பழிக்கிறது. தனிமனித நோக்கில் உருவாக்கப்படுகிற இலக்கியம் நம்பிக்கை வறட்சியை, விரக்தியை, கசப்பு உணர்வை விதைக்கிறது; மக்களுக்கு வாழ்க்கையில் பிடிப்பையும், வாழ்வதில் நம்பிக்கையையும், எதிர்கால நல்வாழ்வில் ஒரு உறுதியையும் அது பரப்புவதில்லை என்று குறைகூறிக் கண்டிக்கிறது.

தமிழ்க் கவிதை உலகிலும் இதெல்லாம் நிகழ்ந்து கொண்டு தான் இருக்கிறது.

1960 கள் முடிய தமிழ் புதுக்கவிதையில் தனி நபர் நோக்கில் எழுதுகிறவர்களே மிகுந்திருந்தனர். பின்னர், அரசியல் தத்துவமான மார்க்சீயத்தின் அடிப்படையில்— சமுதாயப் பார்வையோடு— கவிதை எழுதுகிறவர்களே அதிகமாகத் தோன்றலாயினர்.

1970 களில் தீவிர வேகம் பெற்ற இந்தக் கவிதைப் போக்கு 1980 களில் மிகப் பரந்த அளவில் பெருகியுள்ளது. இன்னும் பரவி வருகிறது. சமூக நோக்கில் எழுதப்படுகிற புதுக்கவிதைகளின்

தொகுப்புகளே மிகுதியாக வெளிவந்துள்ளன. வந்து கொண்டும் இருக்கின்றன.

தனிமனிதனின் அக நோக்கில் எழுதப்படுகிற கவிதைப் புத்தகங்கள் குறைவாகவே காணப்படுகின்றன.

இலக்கியத்தில் பல பிரிவுகளுக்கும் இடம் உண்டு: பல்வேறு சோதனைகளும் அவசியம் தான். வெவ்வேறு தன்மைகளில் இயற்றப்படுகிற படைப்புகளும், சோதனை முயற்சிகளும் இலக்கியத்தை வளம் செய்யக் கூடியவை.

இந்தப் பொது உண்மையை இலக்கியவாதிகளும் இலக்கிய ரசிகர்களும் கருத்தில் கொண்டு செயல்பட்டால், கட்சி— எதிர்கட்சி, மற்றும் கண்டனங்கள், தாக்குதல்கள், வசைபாடல்களுக்கு தேவையே இராது.

தமிழ்க்கவிதையில் தனிமனித அகநோக்கில் நல்ல கவிதைகள் எழுதிப் பெயர் பெற்றவர்களும் இருக்கிறார்கள். சமூக நோக்கில் தீவிரமாகக் கவிதைகள் படைத்து வெற்றி கண்டவர்களும் உள்ளனர்.

ஆனாலும், சமீப வருடங்களில், புதுக்கவிதை என்று சொல்லிக் கொண்டு அச்சில் வருகிற எழுத்துக்கள் பெரும்பாலானவற்றில் புதுமையும் இல்லை. கவிதையும் இல்லை என்பதை சுட்டிக் காட்டத்தான் வேண்டும்.

மரபுக்கவிதை, நோக்கிலும் கருத்திலும் கற்பனையிலும், பாடுபொருளிலும், சொல்லும் விதத்திலும் ஒரே மாதிரியாகிப் போய்த் தேக்கநிலை பெற்றுவிட்டது என்று சொல்லப்படுவது வழக்கம். இந்தக் குறையைப் போக்குவதற்காகவே, இலக்கணத்தை ஒதுக்கி விட்டு, மரபு மீறலாக, புதுக்கவிதை முயற்சி எடுத்தாளப்படுகிறது என்றும் கூறப்பட்டது. காலப்போக்கில், புதுக்கவிதை ஆர்வலர்களும் மரபுக்கவிதைவாதிகள் செய்த தவறுகளையே செய்து கொண்டிருப்பதனால், புதுக்கவிதையும் ஒரு தேக்க நிலை அடைந்துள்ளது.

கவிதையானாலும் சரி, மற்றும் சிறுகதை, நாவல் எதுவாயினும் சரியே; தகுதியும் தரமும் பெற்று நல்ல படைப்பாக விளங்கவேண்டுமானால், அதன் படைப்பாளி நல்ல வாழ்க்கை அனுபவம் பெற்றிருக்க வேண்டும். வாழ்க்கை பற்றி அவருக்கென்று தனித்த பார்வை வேண்டும். மற்றவர்களைப் போல ஒன்றை உருவாக்க முற்படாமல், தனக்கென்று ஒரு தனி நோக்கிலும் போக்கிலும் படைக்க முயல வேண்டும். சொல்லில் உயிர்ப்பும் உணர்வும் சேர்க்க வேண்டும். உள்ளத்தில் உண்மையான கனல் இருந்தால், அவரது படைப்பிலும் ஒளி சேரும். 'உள்ளத்தில் உண்மை ஒளி உண்டாயின் வாக்கினிலே ஒளி உண்டாம்' என்பது பாரதி, வாக்கு.

இந்த எண்ணங்களின் பின்னணியோடு, புதிதாக வெளிவந்திருக்கும் 'காலடியில் தலை' எனும் கவிஞர் மலையருவியின் கவிதைத் தொகுப்பைச் சிறிது ஆராயலாம்.

கவிஞர் அக்கினிபுத்திரன் இந்தக் கவிதைத் தொகுப்பின் ஆய்வுரையில் தெளிவாக சில கருத்துக்களை எடுத்துக் கூறியிருக்கிறார். அவற்றில் சிலவற்றை இங்கே குறிப்பிட விரும்புகிறேன்—

''தனிமனிதனின் அவலத்தை இத்தொகுப்பிலுள்ள பல கவிதைகள் அகவயப்பட்ட நடையில் வெளிப்படுத்துகின்றன. ஓயா அலைச்சலில் ஓழிவிலாப் பயணத்தை மறந்த பயணியை இக்கவிதைகள் காட்டுகின்றன. அவரின் அமைதிப் பாழில் சோகமலர்கள் நாள்தோறும் உதிர்கின்றன.''

''மலையருவியின் கவிதைகளில் கடந்த காலக் கசப்பு இன்னும் திகட்டாமலே இருக்கிறது. தன்னை வெல்லாத நாளை அவர் நம்பத் தயாராக இல்லை.''

''நவீன இயந்திர இரைச்சல் மிக்க நகர வாழ்வின் வேடமிட்ட போலிமைகள் எழுப்பும் அர்த்தமற்ற சப்தங்கள், ஆரவாரங்கள் ஒரு மனிதனின் உள்ளிருந்தெழும் நாதத்தை மாய்த்துவிடும் சூழலை மலையருவியின்கவிதைகள் தோலுரித்துக் காட்டத் தவறவில்லை. சந்தடி, இரைச்சல், கூச்சல், குழப்பம், தன்னிலைநெருக்கடி, வெறுமை, ஏக்கம், தேடல், தேடல் சிக்கல், தேடின் சிக்கல் ஆகியவற்றால் மனிதன் இன்று உள்ளொடுங்கி விடும் விபரீத விபத்து ஓயாது நிகழ்கிறது. இதற்குக் கவிஞனும் விதிவிலக்கல்ல அவன் ஏணி என்று நினைத்து ஏறியவை அனைத்தும் இன்று குச்சிகளாகிச் சுள்ளிகளாகத் தெரிகின்றன. பற்றிக்

கொள்ள ஏதுமற்ற பரபரப்பில் அந்நியமாதலுக்கு இலக்காகும் கவிஞன் தனக்கு நியாயம் கற்பிக்கும் வழிகளைத் தேடுகிறான். ஆத்ம பிணியால் பீடித்த நோயாளி, நோயின் தீவிரம் முற்றிய நிலையில், மருத்துவனாகி,

'பாழ் நகருக்குப் பயந்து ஒதுங்கி
இருட்டுக் காட்டில் வாழ்வைத் தொடங்கு'

என்று பரிந்துரையும் செய்கிறான்.

"தமிழ்இலக்கியத்தில் என்றோ எதிரொலித்த சித்தர் பாடல்களின் தொனியும், நாட்டுப்பாடல் உத்திகளும் இவரது கவிதைகளில் இடம் பெற்றுள் ளன. அதே போல இக்கால முற்போக்குக் கவிதை களில் காணப்படும் உருவகச்சொற்சேர்க்கைகளும், அதன் தொடர் விளைவான கவிதை அமைப்பும் இடம் பெற்றுள்ளன... புதுக்கவிதையின் முக்கியப் பண்பாகிய தர்க்கமும் இவரது கவிதையில் இடம் பெறுகிறது."

இப்படி கவிஞர் அக்னிபுத்திரன் கவிஞர் மலை யருவியின கவிதைகள் பற்றிக் கூறுகிறார்.

கவிஞர் மலையருவி வாழ்க்கை பற்றியும் நம் பிக்கைக் குறித்தும் பல கவிதைகள் எழுதியிருக் கிறார்.

வாழ்க்கையைப் பயணம் என்றும், முடிவில்லாப் பயணம், நெடும் பயணம், இருட்டு வழிப் பயணம் என்றும், ஆரம்பமும் முடிவும் தெரிய முடியாத அர்த்தமற்ற பயணம் என்றும் உரு வகித்து தத்துவதரிசிகளும் சிந்தனையாளர்களும் நிறையவே எழுதியிருக்கிறார்கள்.

மலையருவியும் வாழ்க்கைப் பயணம் குறித்து அதிகம் சிந்திக்கிறார்.

ஒட்டகத்தின் முதுகில் நடத்திய
ஓயா நாடகம்
ஓயப்போகிறதா?

நாகரீகப் பாலையில்
நொண்டிய ஒட்டகம்
நடப்பதை நிறுத்தத் திட்டமிட்டுள்ளதா?

பணப்பேய் ஒட்டகம்
பயணத்தைப் பாதியில்
நிறுத்தத் திட்டமா?

என்றெல்லாம் யோசிக்கிறார். வாழ்க்கை, 'பயனற்ற பயணம்' ஆகவே படுகிறது அவருக்கு.

பொதுவாகப் பலருக்கும் இந்த வாழ்க்கை அர்த்தமற்றதாகவேப் படுகிறது. அதை மலையருவி இப்படிக் குறிப்பிடுகிறார் ஒரு இடத்தில்—

வாழ்ந்த நாள்களில்
வாடிக்கை தவிர
வேடிக்கை ஒன்றுமில்லை
வரைந்த நாட்களில்
தேய்ந்தவை தவிர
தேர்ந்தவை ஒன்றுமில்லை.

மனிதர்கள் பிரமாதமாக வாழ்ந்துவிட்டதாக நினைக்கிறார்கள். பெருமையாகப் பேசி மகிழ்ந்து போகிறார்கள். நினைவு அசை போட்டுச் சிலிர்த்துக் கிறங்குகிறார்கள். உண்மை நிலை என்ன?

இதை மலையருவியின் கவிதை ஒன்று அழகாக விவரிக்கிறது —

பொய்ம்மைக் கிழங்கள்
புன்னகை புரிந்தன
எல்லாம் தமக்குள் அடக்கம் என்பதாய்.

பொய்ம்மை முதுமைகள்
வெற்றியில் சிலிர்த்தன
காலம் காலமாய்க் கவிந்தோம் என்பதாய்.

எத்தனை எத்தனைக்
கீறல்கள் விழுந்து
எலும்புந் தோலுமாய்
எதிர்பார்ப்புகளால் எரிந்த போதும்

பொய்ம்மைக் கிழங்கள்
புன்னகை புரிந்தன
எல்லாம் தமக்குள் அடக்கம் என்பதாய்.

வாழ்ந்ததாய் நினைத்து
வாழ்வைக் கழித்து
வாழ்க்கை இழக்கும்
வயோதிகப் பொய்ம்மைகள்
சிரித்தால் என்ன?
சிலிர்த்தால் என்ன?

என்று கவிஞர் கேட்கிறார்.

வாழ்க்கை இந்தக் கவிஞருக்கும் ஒரு சோக நாடகமாகத் தான் தென்படுகிறது.

ஏமாற்ற ஏணிகளில்
சறுக்கிச் சறுக்கி
அடைய நினைத்த உச்சியின்
வரட்சியில்
'விரக்தி'
...கொப்பளிக்க அஞ்சி
நம்பிக்கையின்
உள்ளங்கால் விரிப்புகளில்
மீண்டும் மீண்டும் முயல்கின்ற
சோக நாடகம்

என்றும்

கரைகளைத் தொடாமலே ஓடும்
சலனங்களிலே
எதையோ தேடும்
தேட முயலும்...
புதைகுழி நாடகம்

என்றும் கூறுகிறார்.

அமைதிப் பனித்துளிகளை
ஏமாற்றக் கதிர்
உருத்தெரியாது உறிஞ்சும்
கொடுங்கோல் நாடகம்.

ஆகவும் இருக்கிறது.

அமைதியும், இன்பமும், ஆனந்தமும் புறத்திலிருந்து கிடைப்பதை விட, தன்னுள் — தனது அகத்துள் — கண்டு கொள்ளப்பட வேண்டியவையாகும். தன்னுள் உறையும் மகத்துவத்தை உணர இயலாத அப்பாவி மனிதர்கள் அவற்றை வெளி

உலகில் தேடி அலுக்கிறார்கள். உண்மையைப் புரிந்து கொள்ளும் ஞானம் ஏற்பட்டதும், மாபெரும் இன்பநிலை கிட்டிவிடும்.

இவ்வாறு ஞானிகள் சொல்லியிருக்கிறார்கள். இந்தத் தரிசனம் பற்றி எழுத்தாளர் லா.ச.ரா. பல இடங்களில், அவருடைய நடையில், அழகாக எழுதி இருப்பது நினைவில் நிற்கிறது.

'நான்' என்று அந்த அரிய அனுபவத்தைக் கூறும் நபர் விவரிக்கிறார். ஒரு கனவு நிலை. எங்கிருந்தோ ஒரு இனிய நாதம் — அற்புத கானம் — எழுகிறது. அவர் அதைத் தேடித் திரிகிறார். நிலா ஒளி படிந்த, பனிமேகங்கள் குன்றுகளாய் நிமிர்ந்த, பல்வேறு அழகுகள் மிகுந்த இடங்களில் எல்லாம் அவர் தேடி அலைகிறார். அந்த நாதம், எங்கிருந்து வருகிறது என்று தெரியாது, ஒலித்துக் கொண்டே யிருக்கிறது. முடிவில் ஒரு வெட்ட வெளி. அவர் நின்று விடுகிறார். அந்த அற்புத கானம் தன்னுள்ளிருந்தே எழுந்து இன்ப அலைகளாய்ப் பரவுகிறது என்பதை உணர்கிறார். ஆனந்தப் பரவசம் அடைகிறார்.

அத்தகைய ஒரு ஞான அனுபவத்தைக் கவிஞர் மலையருவியும் விவரிக்கிறார் ஒரு கவிதையில்—

**தூக்கிய காலைத்**
**திரும்பவும் புதை**

**நடப்பின் கடப்பில்**

**சிந்தனைச் சுடரைச் சிதைக்கும்**
**ஓசை**

அமைதிப் பூவை நசுக்கும்
இரைச்சல்...

சுற்றிச் சூழப்
பத்துத் திசையிலும்
பாரமாய் இறங்கச்
செவிச்சிறகுகள் முறிந்து பதைக்க
தூக்கிய காலைத்
திரும்பவும் புதை.
ஓசைக் கூண்டில்
போதும்.. போதும்...

சந்தடி, இரைச்சல், கூச்சல், குழப்பம்
கம்பிகளுக்குள்ளே
காலம் போதும்...

எனக்குள் நாதம்
எங்கும் அமைதி
அமைதி வானில்
அடடா! இன்பம்

(எனக்குள் நாதம்)

தன்னுள் ஆழ்ந்து, தன்னுள்ளேயே தனிப் பெரும் இன்பத்தைத் தேடும் ஆத்மீக ஞானம் பெறுவதற்கு, இருட்டில் தனித்திருக்கும்படி உபதேசிக்கும் முறையை எதிரொலிக்கிறது ஒரு கவிதை.

கண்களை மூடு
விழிகளைப் புதை

பார்வைப் பூக்களை
வெளிச்சப் பருந்துகள்
கவர விருப்பதைக்
கருத்தில் நிறுத்து.
கண்களின் கற்பைக் காக்க
இயற்கை ஒளியில் இரண்டறக் கலந்து
காட்சிக் கருவைச் சுமந்து வா.

மின்ஒளி விலங்குகள்
சுற்றிச் சீறும்
பாழ் நகருக்குப்
பயந்து ஒதுங்கி
இருட்டில் காட்டில்
வாழ்வைத் தொடங்கு

என்கிறார் கவிஞர்.

இந்த விதமாக விரக்தித் தொனியில் பல கவிதைகள் அமைந்திருப்பினும், மலையருவி நம்பிக்கை வறட்சி கொண்டவரில்லை; நம்பிக்கை உணர்வை எங்கும் எவருக்கும் பரப்புவதில் ஊக்கம் உடையவராக இருக்கிறார். இதற்கும் அவருடைய கவிதைகளே சான்று கூறுகின்றன.

'விடியல்' பிறக்கட்டும்
இந்தப் பயணத்தில்
பல்லக்கு சுமக்கின்ற
கற்பனை ஊன்றுகளை
முறித்துப்
பாதைப் பயணிகளாய்
நடப்பில் தேய்வோம்

நாமே நடப்போம்
நாமே கடப்போம்!
நமக்காய் உள்ளதை
நாமே அடைவோம்.

(நம்பிக்கையின் பயணம்)

வெளிச்சங்களை மென்றுவிட்டு
இருள் நீரில் சறுக்கி விழுந்த
உலகுக்கு
விடியல்களின் மூச்சு முட்ட
நம்பிக்கைகளின் உயிர் ஊட்டுவோம்

(நம்பிக்கையின் உயிர்)

புதுக் கவிதையில் தனி மனித அகவய நோக்கில் எழுதுகிறவர்களில் சிலர் 'ஸர்ரீயலிசம்' என்று சொல்லப்படுகிற ஒரு உத்தியின்படி எழுதுவதிலும் ஆர்வம் உடையவர்களாக இருக்கிறார்கள்.

ரீயலிசம் என்பது எதார்த்தம்...ஸர்ரீயலிசம் என்பது 'மிகை எதார்த்தம்' என்று தமிழில் குறிப்பிடப்படுகிறது. ஸர்ரீயலிசம் என்பது உள இயல் ஆய்வுமுறைப்படி, அதீதமான கற்பனைகளையும் உள் மனசின் ஆசைகளையும் வெளிப்படுத்துவது என்றாகும். அப்படி வெளியிடப்படுகிற எண்ணங்களும் நினைப்புகளும் அறிவுக்குப் பொருந்தி வர வேண்டும் என்ற அவசியம் கிடையாது.

தமிழில் ஞானக்கூத்தன், கலாப்ரியா போன்றவர்களின் கவிதைகளில் ஸர்ரீயலிசம் வெகுவாகக் கலந்து காணப்படும்.

மலையருவி கவிதைகளிலும் இந்தப் பாணி விரவிக் கிடக்கிறது.

தவங்களிடத்தே
பாடங்களின் பின்னல்களை
செய்யத் தொடங்கவும்
பிணங்களிடத்தே
அறிவுகளின் கோலத்தை
வரையத் தொடங்கவும்
அமைதி வடியச்
சிந்தனை காயம்பட்டுள்ளது
அனபு கசிய
நெஞ்சு நசுக்கப்பட்டுள்ளது

(காயம்பட்ட சிந்தனை)

ஒரு நூலிழையில்
தடுக்கி
ஊசியின் கூர்முனையில்
எனைப்
பத்திரப்படுத்திக் கொண்டபின்தான்
அந்த யாரோ
கள்ளிப்பாலில் உடல்விரித்துக்
கததாழை முள்ளில்
கரையேறக் கணடேன்

(ஐக்கியம்)

நெஞ்சில் நிமிர்ந்த
பிரமிடுகளின்
அடிக்கல் பெயரக்
கற்கள்
மடிந்து விழுகின்றன,

மனதை நசுக்குமந்த
மடிந்த கற்களினூடே
சிந்தனைப் பிணங்கள்
சிரிப்பை உமிழ்கின்றன.

(நெஞ்சில் நிறைந்த நினைவுகள்)

இவை சில உதாரணங்கள்.

இத்தகைய உருவகங்கள், (படிமங்கள்) கற்பனைகள் வகையரா கவிதை படிப்பவர்களுக்கு ஒரு வியப்பை, பிரமிப்பை ஏற்படுத்தக்கூடும். அதே வேளையில் புரியாக் குழப்பத்தையும் உண்டாக்கும்,

புதுக்கவிதை புரிவதில்லை; எளிதில் பொருள் விளங்குவதில்லை என்ற குறை கூறலும் குற்றச் சாட்டும் இப்பவும் இருந்து வருகின்றன. அதற்கு இத்தகைய படைப்புகள் வலு சேர்க்க உதவும்.

இவை பழங்காலச் சித்தர்களின் பாடல்களை ஞாபகப்படுத்துகின்றன என்றும் சொல்லாம்.

இந்த ரீதியில் எழுதப்படுகிற (உருவகங்கள்) படிமங்களில் புதுமை இருக்கிறது; இவை கவிதைக்குத் தனி அழகு சேர்க்கின்றன என்பதும் உண்மை தான். பொருள் பொதிந்த இத்தகைய வரிகள் கற்பனை வளத்துக்கும் தனித்த புதுமையான பார்வைக்கும் சான்றுகள் ஆகின்றன எனவும் குறிப்பிடலாம்.

சூரியக் கிழவனின்
நரைத்த முடிகள்
கூரையின் இடுக்கில் நுழைகின்றன'

'நெஞ்சில் அடர்ந்த
புதர்களிலிருந்து
பூநாகம் புறப்படுகின்றது'

'வெளிச்சங்களை மென்று விட்டு
இருள் நீரில் சறுக்கி விழுந்த
உலகு'
'எண்ணச் சிலந்திகள்
எழுப்பிய கோட்டைகள்'

இப்படி இன்னும் எத்தனையோ! இவை கவிஞரின் கற்பனைத்திறத்துக்கு உதாரணங்களாகின்றன.

கவிஞர் மலையருவி யதார்த்த ரீதியிலும் அழகிய கவிதைகள் எழுதவல்லவர் என்பதை எடுத்துக் காட்டும் படைப்புகளும் இத் தொகுப்பில் உள்ளன. 'மனிதத் தின்னிகள்' 'கல்லறைத் தவங்கள்' போன்றவற்றைக் கூறலாம்.

'மனிதத் தின்னிகள்' என்ற கவிதை சுடுகாட்டின் எதார்த்த நிலையைச் சித்தரிக்கிறது. வாழ்க்கைக் களத்தில் மட்டும்தான் மனிதர்களைச் சுரண்டும், அரிக்கும் பிறவிகள் உண்டு என்பதில்லை. சாவின் களமான சுடுகாட்டிலே கூட—இவை பார்வையில் படுகின்றன.

நாசித் துளையருகே
நாலைந்து ஈக்கள்

உடைந்த குடத்தின்
ஓட்டுச் சில்லில்
மொய்க்கும் எறும்புகள்

பிய்த்தெறிந்த
பூச் சிதறல்களில்
உமிழ்ந்த எச்சிலை
உறிஞ்சத் துடிக்கும்
வண்டுகள்

ஊன்றிய காலை
உதறி விடுமுன்
சதையை அரிக்கும்
கரையான்கள்.

இவற்றை காட்சிப்படுத்தும் கவிஞர் 'சுடு காட்டிலுமா?' என்று கேட்கிறார் 'மனிதத் தின்னிகள்' என்று தலைப்பிட்டு.

'கல்லறைத் தவங்கள்' நல்ல கவிதை

'ஒரு தீக்குச்சியின் தலையில்
எத்தனைக் கடமைகள்
உரசப் போகும்
பொழுதுக்காக
எத்தனைத் தவங்கள்

என்று சிந்திக்கத் தூண்டுகிறது கவிதை.

ஒரு சிறு பொறிக்குள்
ஒடுங்கிய மூச்சுகள்
அடங்கிய பேச்சுகள்

ஆண்டுகள் அடங்கி
ஆற்றலாய் நிமிர
ஐந்து விரல்களுக்குள்
ஓர் அடங்காச் சக்தி

சூரியச் சிவப்பின் விடியலுக்குள்
கருங்காடுகளின் கல்லறை

ஒரு தீக்குச்சியின் தலைக்குள்
எத்தனைக் கடமைகள்
உரசப் போகும் பொழுதுக்காக

கருத்து நிறைந்த கவிதை.

ஒரு சில வரிகளில் ஆழ்ந்த கருத்தை அமைத்துத் தந்திருக்கிறார் மலையருவி 'மயக்கம்' என்ற கவிதையில்

பொய்முடி புனைந்தாள்
கூந்தல் நீண்டு
மலர்சூடி மணந்தது.
எதில் வெற்றி?

பொய்யின் இருப்பிலா?
இருப்பின் மறைப்பிலா?

தத்துவச் சிந்தனைக்குக் களம் அமைக்கிறது. இந்தக் கவிதை

இதே போல, தர்க்க ரீதியில் கேள்விகள் எழுப்பி, விடை கூறி, மீண்டும் தர்க்கமாக வினா எழுப்பிக்கவிதைவளர்க்கும் திறமையும்மலையருவியிடம் இருக்கிறது. 'வேடங்களின் பின்னே வெற்றுமுகம்' என்ற கவிதை இதற்கு நல்ல சான்று ஆகும்.

வேடங்கள் பொய்யா?
வேடத்தில் வெளிப்படும் வினைகள் பொய்யா?

*என்ற கேள்விகளை எழுப்புகிறார் கவிஞர்.*

'புனைவுகள்'
புனைந்த பின்னரோ புதுவித நினைவுகள்

புனைந்த முகங்கள்
புனைவுக்குள்ளே
புகுந்து
சிக்கி
புன்னகைக்குள்ளே புலம்பிய போதும்
கடைக் கண் நடிப்பில்
கண்ணீர்த்துளிகள் கவரப்பட்டதை
அறியா வெறியில்
அலறிச் சிரிப்பதும்
அழுது வெடிப்பதும்
வேடங்கள் பெற்ற வெற்றி அல்லவோ?

*இந்தச் சிந்தனையின் மீது கவி ஒரு முடிவுக்கு வருகிறார்.*

வேடங்கள் பொய்யல்ல
வேடத்தில் வெளிப்படும் வினைகள் தாம் பொய்
வேடங்கள் பொய்யெனில்
வேடம் புனைந்த
வேந்தன் பொய்யா?
வேலன புனைந்த
வேந்தன் பொய்யா?

*தர்க்கிக்கும் கேள்விகள் ஒரு தெளிவுக்கு இட்டுச் செல்கின்றன.*

புனைவுகளின் புலம்பலில்
வேந்தன் வெல்கிறான்
வேலன் தோற்கிறான்

மேலும் ஒரு ஐயம் எழுகிறது கவிக்கு.

வேடம் புனைந்து வினைகள் ஆற்றிட
வேடம் வெல்லுமோ
வினைகள் வெல்லுமோ?

இது எதார்த்த நிலை பற்றி சிந்திக்க வைக்கிறது.

வேடங்களின் பின்னே
ஒரு வெற்றுமுகம்
வேதனைப் படுவதென்ன வேடிக்கையா?

இப்படி சிந்தனைகளை வளர்த்து, மேலும் சிந்திக்கத் தூண்டி, வாழ்க்கை உண்மைகளை உய்த்து உணர வைப்பது கவிதையின் வெற்றி ஆகும்.

மலையருவி கவிதைகளில் படித்து ரசித்து, வியந்து, சிந்தனைக்கு வேலை கொடுப்பதற்கு அதிகம் இடம் இருக்கிறது. இந்த ரீதியில் அவர் பல கவிதைகளைப் படைத்திருக்கிறார். வாழ்க்கை உண்மைகளை உணர்ந்த மனநிலையின் சித்திரிப்பு களாக, ஆழ்ந்த தத்துவ வெளிப்பாடுகளாக அநேக கவிதைகள் விளங்குகின்றன.

'காலக் கடலில்', 'தாமதமாய் வந்த நான்', 'மலரும் நானே முள்ளும் நானே' போன்றவை இப்படிப்பட்டவை.

தத்துவம் வாழ்க்கை நிலையின் சூட்டை மறந்து விடும்படி செய்து கவிஞரை வெறும் கனவுகளில் ஆழ்த்தி விடுவதில்லை, யதார்த்த நிலைகளை எடுத்துக்காட்டுகிற அவருடைய கவிதைகள் இதை உணர்த்தும்.

ஒன்றாய்க் கூடி
ஒன்றைத் தேடுவோம்
தனித் தனியாகத்
தனிமையில் இருந்து
அவனோ, அவளோ, அதுவோ
எதுவோ தேடுவோம்

பையின் காற்றைக்
கையில் பிடிக்கக்
கையில் பிடித்த
காற்றைக் கரைக்க
தேடுவோம்... தேடுவோம்
கூடித் தேடுவோம்
தேடி ஓடுவோம்.

தேடல் கனத்து தீவிரமாகி மும்முரப்படுகையில், வாழ்க்கைத் தீயின் சூடு உறைக்கிறது. உடனே என்ன நேர்கிறது? கவிதை இதை அழகாக சித்திரிக்கிறது.

சூடாகிப் போன
தத்துவச் சிமினி
நடைமுறை தெறிக்கப்
பட்டென வெடித்துச் சிதறியது.

அப்படி பாதிக்கிற தெறிப்பு எது? என்று பார்த்தால், 'அய்யோ பசி'... என்று அறிவிக்கிறது கவிதை.

வாழ்க்கையில் லயித்து, வாழ்க்கையேயாகி அனுபவிக்கிறவனே அனுபவமாய், காண்கிறவனே காணப்படுகிற பொருளாகவும் ஒன்றி விடுகிற ஆன்மீக நிலையை மலையருவியின் கவிதைகள் சில வெளிப்படுத்துகின்றன.

எழுதும் தூரிகை
வண்ணக் குழம்பில்
நானே குழைந்து
ஓவியமாகிறேன்

தூரிகை பிடித்த
விரல்களின் வழியே
நானே படர்ந்து
காட்சியாய்க கரைகிறேன்

மகுடியை இசைக்கும் லயிப்பில்
நானே பாம்பாய்
நெளிந்தாடுகிறேன்

ஊதும் குழலில்
காற்றாய்க் கரைந்து
உயிரே இசையாய்
உருகிடுகின்றேன்.

ஆயினும் 'ஓய்வைத் தேடி, ஓயா அலைச்சல்' ஆகத்தான் மனித வாழ்க்கை இருககிறது என்று கவிஞர் உணர்த்துகிறார்.

வாழ்க்கையின் உய்வு அல்லது உயர்வு, தன்னைத் தானே அறிவது; தன்னுள் தன்னையே கண்டு இன்புறுவதுதான் என்று தத்துவ ஞானம் அறிவுறுத்துகிறது. கவிஞர் மலையருவியும் இப்

பாதையிலேயே கவிதைப் பயணம் மேற்கொண் டிருக்கிறார்.

அம் முயற்சியில் அவர் பூரண வெற்றி அடையவில்லை என்று அவரே சுயவிமர்சனம் செய்து கொள்கிறார்.

அதைத் தேடி,
இதைத் தேடி,
தேடித் தேடித் தேய்த்தேன்.

சொற்களை நிறுத்திச்
சுமைகளை ஏற்றினேன்.

நகர மறுத்தன.

உத்திகளாலே குத்தித் தள்ளி
அணிகளாலே நையப் புடைத்து
மெல்ல நகர்த்தினேன்.

சொற்கள் செத்தன.

மீண்டும் மீண்டும்
கவிதை தேய்ந்தது.

கடைசி முயற்சியாய்
எனக்குள் பயணம்
என்னை அடைய

எங்கே கவிதை?

இப்படி, உண்மையை, உயர்வை, அழகை அனுபவ ஞானத்தைத் தேடும் கவிஞரின் முயற்சி தொடர்கிறது. தான் செய்து முடித்ததில் திருப்தி இன்மையும், மேலும் உயர்வாய் உன்னத மாய் சாதனை புரிய வேண்டும் என்ற தவிப்பும், அதற்கான முயற்சியை மேற்கொள்வதும்,

உண்மையான கவிஞனின், படைப்பாளியின் இயல்புகள் ஆகும்.

இவற்றை மலையருவி பெற்றிருக்கிறார். எனவே அவர் மேலும் முன்னேறுவார், வளர்ச்சி அடைவார், புதியன படைத்துத் தருவார் என்று எதிர் பார்க்கலாம்.

கவிஞரே நம்பிக்கையுடன் உறுதியாய் சொல்கிறார்—

எடுக்கக் குனிந்தவன்
நிமிரத்தான் போகிறேன்.

எதைத் தேடி வந்தேனோ
அதை எடுக்க வேண்டாமா?

எடுக்கக் குனிந்தவன்
நிமிரத்தான் போகிறேன்.

அவருடைய நம்பிக்கை வாழ்க! கவிஞரின் ஆற்றலும் உழைப்பும் வெற்றி பெறட்டும் என்று வாழ்த்துகிறேன்.

10-7-85
சென்னை-14

வல்லிக்கண்ணன்

தமிழ் எழுத்துத் துறையில் 45 வருடங்களாக இலக்கியப் பணி புரிந்து கொண்டிருக்கும் வல்லிக் கண்ணன் சிறுகதைகள், நாவல்கள், கட்டுரைகள், புதுக்கவிதை, மொழிபெயர்ப்பு முதலிய பலவற்றிலும் பெயர் பெற்றிருக்கிறார். 'புதுக்கவிதையின் தோற்றமும் வளர்ச்சியும் 'பாரதிக்குப்பின் தமிழ் உரைநடை', 'சரஸ்வதிகாலம்' 'காலத்தின் குரல்' போன்ற இவருடைய ஆய்வு நூல்கள் இலக்கிய வரலாற்று நூல்களாகவும் அமைந்துள்ளன. 'தமிழில் சிறு பத்திரிகைகள்' பற்றிய இவரது ஆய்வு குறிப்பிடத் தகுந்தது. இவருடைய 'புதுக்கவிதையின் தோற்றமும் வளர்ச்சியும்' என்ற நூல் சாகித்ய அகாடமிப் பரிசைப் பெற்றுள்ளது, படிப்பதையும் எழுதுவதையுமே வாழ்க்கையாகக் கொண்டிருக்கும் இவருக்கு இப்போது வயது 65. இவருடைய இயற்பெயர் ரா. சு. கிருஷ்ணசுவாமி, திருநெல்வேலி மாவட்டம் ராஜவல்லிபுரம் இவரதுசொந்த ஊர்.